# பகவத் பாதை

BAGAVATH PATHAI

• Volume : 1 • Issue : 13 தமிழ் மாத இதழ் • March 2015 • Annual Subscription Rs. 100/-

• மலர்:1 • இதழ்:13 • மார்ச் 2015 • வருடச் சந்தா ரூ.100/-


## கோபம்



எல்லா உணர்ச்சிகளையும் போல் கோபத்திற்கும் சில தனிப்பட்ட சக்தி உண்டு. அந்த சக்தியையும் ஆக்கபூர்வமாகச் செயல்படுத்துவது ஒன்றே நமது புத்தியின் கடமை.

– ஸ்ரீ பகவத்



அவர் ஒரு மருத்துவக் கல்லூரி மாணவர். அவர் மற்ற மாணவர்களுடன் சண்டை சச்சரவுகளில் ஈடுபடும் சுபாவம் உடையவர். அதனால் மாணவர்களிடையே அவருக்கு விரோதிகளும் பலர் உண்டு.

நமது கருத்துகளில் ஈடுபாடு கொண்ட அவர் தனது அடாவடித் தனங்களிலிருந்து விடுபட்டு விட்டார். கோபதாபங்களைக் குறைத்துக் கொண்டார்.

ஒருமுறை அவர் தனது அறையில் தனியாக உட்கார்ந்திருக்கும் போது, ஏற்கனவே அவரால் பாதிக்கப்பட்ட மாணவர் ஒருவர் உள்ளே நுழைந்து அவரது கன்னங்களில் அறைந்து விட்டார்.

அந்நிலையில் அவருக்கு கோபம் ஏற்பட்டது. தன்னை அடித்தவரை அங்கேயே கொலை செய்து விட வேண்டும் என்ற கோபம் ஏற்பட்டது.

ஆனாலும் தனது கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு,

“உனக்கு திருப்திதானா? சரி, போ” என அவரை ஒன்றுஞ் செய்யாமல் விட்டு விட்டார்.

அவரை அடித்த அந்த நபரும் “சீ கோழைப் பயலே !” என்று கூறிவிட்டுப் போய் விட்டார்.

அடிபட்ட அந்த மருத்துவக் கல்லூரி மாணவர் நம்மிடம் தொடர்பு கொண்டு பேசினார்.

“எனக்கு எவ்வளவோ தடவை கோபம் ஏற்பட்டுள்ளது. ஆனால் இந்த முறை தான் அதிகமான கோபம் என்று கூடச் சொல்ல முடியாது. இதை ஒரு கொலை வெறி எனலாம். இத்தகைய கொலை வெறி இதற்கு முன்னால் ஏற்பட்டதில்லை...”

“உங்களுடைய கருத்துகளைத் தெரிந்து கொண்ட பிறகு ஓரளவு அடக்கத்துடன் தான் வாழ்ந்து வருகிறேன். ஆனால் கோபம் மட்டும் இப்படி குறையாமல், கொலை வெறியாக ஏன் மாறி விட்டது?”

-இப்படி அவர் ஒரு கேள்வியைக் கேட்டார்.

நமது நூல்களைப் படித்த பெரும்பாலோர் தங்களது கோபங்கள் குறைந்து விட்டன என்றே கூறி வந்தனர்.

ஆனால் அவருக்கு ஏற்பட்ட அனுபவம் சற்று வித்தியாசமாகத் தோன்றியது. அவருக்கு ஏற்பட்ட கோபமானது, குறைவதற்குப் பதிலாக கூடியுள்ளது. கொலை வெறியாகவே மாறியுள்ளது.

எல்லோருக்கும் குறைந்து வந்த கோபம் அவருக்கு மட்டும் ஏன் கூடியுள்ளது?

அப்படி கொலை வெறி ஏற்பட்ட போதும், எதனால் அவர் தன்னை அடித்தவனை மன்னித்து விட்டு விட்டார்?

அவருக்கு என்ன தான் நடந்துள்ளது?

ஒரு முறை பத்து வயதே நிரம்பிய மாணவ மாணவியரிடையே உரையாட நேர்ந்தது. பள்ளிக் கூட நிர்வாகி நமக்கு வேண்டியவர். அவர் தனது மாணவர்களுக்கு நாம் ஏதாவது கூற வேண்டும் என விரும்பினார்.

மாணவர்களிடையே பேசும் போது மாணவன் ஒருவன் கேள்வி கேட்டான்.

“எனது அப்பாவும், அம்மாவும் அடிக்கடி சண்டை போடுகிறார்கள். அது எனக்கு மிகவும் கஷ்டமாக உள்ளது. நான் என்ன செய்ய வேண்டும்?”

யார் சண்டையிட்டாலும் அது பார்ப்பதற்கு விகாரமாகத் தான் இருக்கும். அந்தச் சிறுவனையும், சிந்திக்கத் தூண்டினோம். அதற்காக அவனிடம் கேள்வி கேட்டோம்.

“உன்னுடைய அப்பாவும், அம்மாவும் சண்டையிட்ட போது அதை பார்க்க உனக்கு கஷ்டமாகத் தான் இருக்கும். நீ எப்போதாவது யாரிடமாவது சண்டை போட்டிருக்கிறாயா?”

“மற்ற மாணவர்களிடம் சண்டை போட்டிருக்கிறேன்.”

“எதற்காக சண்டை போட்டிருக்கிறாய்?”

“யாராவது என்னைத் திட்டினால் எனக்குக் கோபம் வந்து விடும். கோபம் வந்தால் சண்டை போட்டு விடுவேன்.”

"எவராவது உன்னைத் திட்டுவதாக வைத்துக் கொள்வோம். அப்படித் திட்டியவுடன், கோபம் ஏற்பட வேண்டும் என்று நீ நினைத்ததால் கோபம் ஏற்பட்டதா? அல்லது திட்டியவுடன் உன்னையறியாமலேயே கோபம் ஏற்பட்டதா?"

"என்னை அறியாமலேயே கோபம் ஏற்பட்டு விடும்."

''யாராவது உன்னைத் திட்டினால் உன்னை அறியாமலேயே கோபம் ஏற்பட்டு விடுகிறது. அப்படி கோபம் ஏற்பட்டதால், உன்னைத் திட்டியவனுடன் சண்டை போட்டு விடுகிறாய். அப்படித் தானே?"

"ஆமாம், அப்படித் தான்"

"திட்டியவுடன் உன்னை அறியாமல் கோபம் வந்து விட்டது. திட்டியவனுடன் சண்டை போட்டதும், உன்னையறியாமல் நடந்து விட்டதா? அல்லது திட்டியவனை சும்மா விட்டு விடக் கூடாது என்று நீயாக முடிவு செய்து சண்டை போட்டாயா?"

"கோபம் என்னையறியாமல் வந்து விட்டது. ஆனால் சண்டை போட்டது நானாக முடிவு செய்து தான் சண்டை போட்டேன்."

–இப்படி அந்த பத்து வயதுச் சிறுவன் இரண்டையும் வித்தியாசப்படுத்திக் கூறினான்.

அவனிடம் மேலும் கேட்டோம்.

"நீ எப்படி நடந்து கொள்ள வேண்டும்? கோபம் உன்னையறியாமல் நடக்கும் ஒன்று. அதை நீ எதுவும் செய்ய முடியாது. உனக்கு ஏற்படும் உணர்ச்சிகள் அனைத்தும் அவை போக்கில் இப்படித்தான் ஏற்படும். ஆனால் நீயாக முடிவு செய்து சண்டை போடுவது என்பது உனது கைகளில் உள்ளது. கோபம் ஏற்படுவது உன்னுடைய கைகளில் இல்லை. ஆனால் சண்டை போடுவதும் சண்டை போடாததும் உனது கைளில் உள்ளது. இந்நிலையில் நீ எப்படி நடந்து கொள்ள வேண்டும்?"

அவன் எதுவுமே யோசிக்காமல் உடனடியாக பதில் சொன்னான்.

"நான் சண்டை போடாமல் பொறுமையாக இருக்க வேண்டும்."

பக்கத்திலுள்ள இன்னுமொரு மாணவன்

"பொறுத்தார் பூமி ஆள்வார்" என்று கூறினான்.

பொறுமையைக் கடை பிடிக்க வேண்டும் என்று நாமும் கூறுவோம் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

''பொறுமையாக இருக்க வேண்டும் என்பது கட்டாயமல்ல. பல இடங்களில் பொறுமை தேவைப்படலாம். சில இடங்களில் எதிர்ப்பை காட்டுவதும் தேவைப்படும். இங்கு நமக்கு முக்கியமாகத் தேவைப்படுவது "நிதானம்" மட்டுமே ஆகும்."

–இப்படி அவர்களுக்குக் கூறப்பட்டது.

சட்டத்தை வடிவமைத்தவர்கள், இப்படியொரு விதிமுறையை – விதி விலக்கைக் கூறுகிறார்கள்.

ஒருவர் மற்றொருவரை கொலை செய்து விடுகிறார். இது குற்றமா? பழிவாங்கும் நோக்கத்துடன், திட்டமிட்டு ஒருவர் கொலை செய்தால் மட்டுமே அது கொலைக் குற்றமாகும்.

திடீரென ஒருவர் உணர்ச்சி வசப்பட்டு கோபத்தினால் (Sudden Provocation) கொலை செய்தாரேயானால் அது கொலைக் குற்றமாகாது. அதை வேறு வகையான குற்றமாகக் கருதப்பட்டாலும் கொலைக் குற்றமாகக் கருதப்பட மாட்டாது.

"எதிர்பாராத கோபத்தினால் கொலை செய்ய நேர்ந்து விடுவது கூட இயற்கையானது" என்ற கண்ணோட்டத்தில் அவர்கள் இவ்வாறு வடிவமைத்துள்ளார்கள்.

(திடீர் கோபத்தைக் காரணங்காட்டி கொலை குற்றத்திலிருந்து, குற்றவாளிகள் தப்பி விடக்கூடாது என சில நிபந்தனைகளை விதித்துள்ளார்கள் என்பது வேறு செய்தி.)

ஆனால் மனதில் ஏற்படும் உணர்ச்சிகளான கோபம், பயம், கவலை போன்றவைகளுக்கு தான் நாம் பொறுப்பு கிடையாதே தவிர

நம்முடைய அனைத்து புறச்செயல்களுக்கும் நாம் தான் பொறுப்பு. நமது அறிவு தான் பொறுப்பு.

இதில் நாம் நம்முடைய முதலாவது உதாரணத்துக்கு வருவோம் – முதலாவது கேள்விக்கு வருவோம்.

அந்த மாணவருக்கு ஏன் அப்படி ஒரு கொலை வெறி ஏற்பட்டது?

இதற்கு முன்னால் அவருடைய வாழ்க்கை முறை வேறு; இப்போதைய அவருடைய வாழ்க்கை முறை வேறு.

இதற்கு முன்னால் அவருக்கு இப்படி கோபம் ஏற்படும் போதெல்லாம் அவர் அந்தக் கோபத்தை செயலாக்கி விடுவார் – அடுத்தவனைத் தாக்கி விடுவார்.

இப்போது தான் அவருக்கு ஒரு நிதானம் கிடைத்துள்ளது.

உணர்ச்சிகளுக்கு மனம் காரணம், செயல்களுக்கு புத்தி மட்டுமே காரணம். உணர்ச்சிகள் அனைத்தும் அப்படியே செயலாகி விடும் பட்சத்தில், நமது புத்திக்கு அங்கு வேலையே இல்லாமல் போய் விடுகிறது.

மனதுக்கும், புத்திக்கும் இடைவெளி இருக்கும் போது தான், புத்தியானது செயலை ஆராய்ந்து, தேவையானதை மட்டும் செய்கிறது.

நாம் நிதானத்துடன் செயல்படும் போது தான் மனதுக்கும் புத்திக்கும் இடையேயுள்ள இடைவெளியே நமக்குத் தெரிகிறது.

இனி நாம் மீண்டும் பழைய கேள்விக்கே வருவோம்.

அவருக்கு ஏன் அப்படியொரு கொலை வெறி ஏற்பட்டது?

இதற்கு முன்னால் ஏற்படாத கொலை வெறி இப்போது ஏன் ஏற்பட்டது?

பக்குவப்பட்ட ஒருவருக்கு இப்படி ஒரு கொலைவெறி ஏற்படலாமா?

குறைந்திருக்க வேண்டிய கோபம் ஏன் இப்படிக் கூடுதலாகி, ஒரு கொலை வெறியாகவே மாறி விட்டது?

உண்மையில் நமக்கு ஏற்படும் அத்தனை கோபமும் கொலை வெறியாகவே உள்ளது.

நாம் நிதானத்தை இழந்து விட்டால் – புத்தி செயல்பட வாய்ப்பு இல்லாததால்

அது எப்படி உள்ளது என்பதையே நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அந்த மாணவர் அன்று நிதானத்துடன் செயல்படும் வாய்ப்பைப் பெற்றிருந்ததால்

அன்று தான் தனக்கு ஏற்படும் கோபத்தின் தன்மை எப்படி உள்ளது என்பதையே தெரிந்து கொள்ள முடிந்துள்ளது.

அன்று அவர் நிதானத்தில் இருந்த காரணத்தினால் தான் கொலை வெறியாகத் தோன்றிய கோபத்தையும் புறந்தள்ளி தன்னை அடித்தவனைக் கூட மன்னிக்க முடிந்தது.

நமது கோபத்தைச் செயல்படுத்தும் பொறுப்பு நம் மனதுக்குக் கிடையாது.

அது நம் புத்திக்கு மட்டுமே உண்டு.

கோபத்தை செயல்படுத்த வேண்டுமா, வேண்டாமா என்பதை நம் புத்தி தான் தீர்மானிக்க வேண்டும்.

உணர்ச்சியின் நாகரீகம் என்பது நமது கோபத்தைக் கூட நாகரீகமாக வெளிப்படுத்துவதே ஆகும்.

எல்லா உணர்ச்சிகளையும் போல் கோபத்திற்கும் சில தனிப்பட்ட சக்தி உண்டு.

அந்த சக்தியையும் ஆக்கப்பூர்வமாகச் செயல்படுத்துவது ஒன்றே நமது புத்தியின் கடமை.



## ?கேள்வி பதில்

அன்பர் ஒருவர் பகவத் ஐயாவின் நூல்கள் சிலவற்றை படித்து இருப்பதாகவும், பகவத் பாதை மாத இதழ் தொடர்ந்து படித்து கொண்டு வருவதாகவும் கூறினார். பல ஆண்டுகளாக ஆன்மிகம் சம்பந்தமான Osho நூல்கள் நிறைய படித்திருப்பதாகவும், JK நூல்கள் நிறைய படித்திருப்பதாகவும் கூறினார். இப்படி பல ஆண்டுகளாக பல ஆன்மிக நூல்களை படித்த போதும் மனதில் இன்னும் சில கேள்விகள் இருந்து கொண்டே தான் இருக்கிறது. அந்த கேள்விகளுக்கு நீங்கள் விடை தர முடியுமா? எனக் கேட்டார். நான் எனக்கு புரிந்த அளவில் உங்களுக்கு விடை தருகிறேன் என்று கூறினேன். இனி அவருடன் நடந்த உரையாடல்....

**நண்பர்:** எனக்கு எண்ணங்கள் தொடர்ந்து அதிகமாக வந்து கொண்டே இருக்கின்றன. அதைத் தடுத்து நிறுத்த முடியுமா என்பது தான் எனது கேள்வி

**சரவணன்:** எண்ணங்களை நீங்கள் உருவாக்குவதாக நினைக்கிறீர்களா? எண்ணம் உருவாவது உங்கள் கட்டுப்பாட்டில் இருப்பதாக எண்ணுகிறீர்களா?

**நண்பர்:** எனது கட்டுப்பாட்டில் இல்லை என்று தான் தோன்றுகிறது.

**சரவணன்:** நமது கட்டுப்பாட்டில் இல்லாத ஒன்றை ஏன் கட்டுப்படுத்த வேண்டும் என்று நினைக்கிறீர்கள்.

**நண்பர்:** சரிதான். ஆனால் அது எனக்கு தொந்தரவாக இருக்கிறதே, என்ன செய்வது?

**சரவணன்:** நீங்கள் பார்த்து ஏதாவது ஒரு வேலையைச் செய்வது என்பது நீங்கள் செய்வது ஆகும். அதாவது உங்கள் அலுவலகத்திற்கு பைக்கில் செல்வது என்பது நீங்கள் செய்யும் வேலை. அப்படி பைக்கில் போகும் போதும் உங்களுக்குள் ஓர் எண்ண ஓட்டம் ஓடிக்கொண்டே இருக்கிறது இல்லையா?

**நண்பர்:** ஆமாம்...

**சரவணன்:** அப்படி எண்ண ஓட்டம் ஓடிக் கொண்டு இருப்பதற்கு நீங்கள் ஏதாவது செய்கிறீர்களா? இல்லை தானாக ஏற்படுகிறதா?

**நண்பர்:** தானாக ஏற்படுவதாகத் தான் நினைக்கிறேன்.

**சரவணன்:** உங்கள் அலுவலகத்திற்குச் செல்வது என்பது நீங்கள் செய்யும் வேலை. அப்படிப் போகும் உங்களுக்குள் ஓர் எண்ண ஓட்டம் ஓடிக்கொண்டிருக்கிறது, இல்லையா?

**நண்பர்:** ஆமாம்.

**சரவணன்:** வண்டி எடுத்து ஓட்டுவது நீங்கள் செய்யும் வேலை. நீங்கள் வண்டியை ஓட்டிக் கொண்டு அலுவலகம் செல்லலாம் அல்லது பாதியிலேயே நிறுத்தி விடலாம். அலுவலகம் செல்லாமல் திரும்பி கூட விடலாம். இதுவெல்லாம் நீங்கள் செய்யும் வேலை. இப்படி நடந்து கொண்டே இருக்கும் போது கூட உங்களுக்குள் ஏற்படும் எண்ண ஓட்டத்திற்கு நீங்கள் எதுவும் செய்வதில்லை. எண்ண ஓட்டத்தை மட்டும் நாம் பார்த்து ஒன்றும் செய்து விட முடியாது. அப்படித் தானே?

**நண்பர்:** நாம் பார்த்து அதற்கு ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் அது அப்படித்தான் ஓடிக் கொண்டு இருக்கும் என்றால் நாம் மனதை எதற்கும் பயன்படுத்த தேவையில்லையா?

**சரவணன்:** அப்படியில்லை, மனம் இரண்டு வகையில் செயல்படுகிறது. தானாகத் தோன்றக் கூடிய எண்ணம், உணர்வு ஒரு பகுதியாகவும் நாமாக திட்டமிட்டு நமது வேலைகளை பிரித்து செயல்படுவது என்பது மனதின் இன்னொரு பகுதியாகவும் செயல்படுகிறது. நாமாக திட்டமிடுவது என்பது முழுவதும் நமது கைவசம் உள்ளது. இன்றைய வேலைகளை எப்படிச் செய்வது? நாளைய வேலைகளை எப்படிச் செய்வது? எதை முதலில் செய்வது? எதற்கு முக்கியத்துவம் கொடுப்பது? போன்ற திட்டமிடல் முழுவதும் நம் கையில் உள்ளது. இப்படி நாமாக செயல்படும் பகுதியில் மட்டும் நாம் கவனமாக செயல்பட்டால் போதும். தானாக ஏற்படுகிற பகுதியில் நாம் எதுவும் செய்ய முடியாது.

**நண்பர்:** தாமாக ஏற்படுகிற பகுதிக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம். அப்படித் தானே?

**சரவணன்:** ஆமாம். தாமாக ஏற்படுகிற எண்ணம் எல்லாம் நம்மை கேட்டு ஏற்படுகிறதா, என்ன? "நீ இப்படி நினைத்துக் கொள், அப்படி நினைத்துக் கொள்" என்று கூற முடியுமா என்ன? அது அதுவாக செயல்படுகிறது. அதற்கு நாம் ஒன்றுமே செய்ய முடியாது.

**நண்பர்:** நாம் ஒன்றும் செய்வதற்கு இல்லை தான், இருந்தாலும் தொடர்ந்து இப்படி தேவையற்ற எண்ணம் வந்து கொண்டே இருகிறது என்பதற்காக தான் .

**சரவணன்:** இதயம் துடித்துக் கொண்டு தானே இருக்கிறது, சுவாசம் நடந்து கொண்டே தானே இருக்கிறது, அது போல எண்ணமும் வந்து கொண்டே இருக்கும். இதயம் எப்போதும் துடித்துக் கொண்டே இருக்கிறது. சுவாசம் எப்போதும் நடந்து கொண்டே இருக்கிறது என்று கூறுவீர்களா? அதுபோல் எண்ணம் மட்டும் ஏன் வரக்கூடாது என்று கூறுகிறீர்கள்?

**நண்பர்:** மனமற்ற நிலையை அடைய முடியவில்லையே என்ற எண்ணம் எப்போதும் இருந்து

கொண்டே இருகிறது. சிந்தனை இல்லாத நிலையை எப்படி உருவாக்க முடியும்?

**சரவணன்:** சிந்தனை இல்லை என்றால் எப்படி உங்களால் அலுவலகம் செல்ல முடியும்? எப்படி சாப்பிட முடியும்? எப்படிப் படிப்பீர்கள்? எந்த வேலையையும் எப்படி தான் செய்வீர்கள்?

**நண்பர்:** சிந்தனை இல்லாமல் எந்த வேலையையும் செய்ய முடியாது.

**சரவணன்:** எண்ணம் தாமாக ஏற்பட்டு கொண்டே இருக்கும். அவற்றில் நமது செயலுக்கு தேவையானவற்றை எடுத்து செயல்படுத்திக் கொள்ள வேண்டும். நமக்குத் தேவை என்றால் எடுத்து செயல்படுத்திக் கொள்ளலாம். தேவையில்லை என்றால் எதுவும் செய்யாமல் அப்படியே விட்டுவிட வேண்டியது தான். அதற்கு மேலும் தாமாக வருவதைப் பற்றி நாம் கண்டு கொள்ளத் தேவையில்லை.

**நண்பர்:** நமக்கு ஏற்படுகிற எண்ணத்தைப் பற்றிய கவலை கொள்ளாமல், அதை நமது செயலுக்கு எடுத்து பயன்படுத்தி கொள்ளலாம், அப்படித் தானே?

**சரவணன்:** ஆமாம். உதாரணமாக Fan 24 மணி நேரமும் ஓடிக் கொண்டே இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அது போல் நமது மனதிலும் எண்ண ஓட்டம் ஓடிக் கொண்டே இருக்கிறது. Fan ஓடிக் கொண்டு இருப்பது நம்முடைய கவனத்திற்குத் தெரியும் இல்லையா? அதுபோல் மனதில் எண்ண ஓட்டம் ஓடிக் கொண்டு இருப்பதும் நமது மனதின் கவனத்திற்கு ஏதோ ஒரு சமயத்தில் தெரியும் இல்லையா?

**நண்பர்:** ஆமாம், தெரியும்.

**சரவணன்:** நமக்கு தெரியும் போது Fan Switch Off செய்து விடலாம், இல்லையா?

**நண்பர்:** ஆமாம், தெரியும் போது Fan Switch Off செய்து விடலாம்.

**சரவணன்:** தெரியும் போது Fan Switch off செய்வது ஒன்று மட்டும் தான் நமக்கு இருக்கிற வாய்ப்பு. ஆனால், Fan On ஆவதற்கு நாம் எந்த வகையிலும் காரணம் கிடையாது. அது தானாகவே On ஆகிவிடும். நமக்குள் எழும் ஓர் எண்ணம், ஒரு வார்த்தை, ஓர் உணர்வு, வாசம், யாரோ ஒரு நபர், இப்படி ஏதோ ஒன்று தானாகவே Fan ஐ On செய்து விடும். Fan on ஆவதற்கு நாம் எந்த வகையிலும் பொறுப்பு கிடையாது. அதை முற்றிலும் நாம் செய்வதே இல்லை. ஆனால் நமக்கு Fan ஓடுவது தெரியும் போது நாம் Fan Switch off செய்து விடலாம். அதுபோல் நமது மனதில் தாமாகத் தோன்றும் எண்ண ஓட்டத்தை தடுக்க முடியாது. ஆனால் நமது மனதின் கவனத்திற்கு எண்ண ஓட்டம் தெரியும் போது நாமாகத் திட்டமிட்டு செயல்படக் கூடிய செயலில் ஈடுபடலாம் இல்லையா?

**நண்பர்:** நிச்சயமாக அவ்வாறு நாம் செயல்படலாம்.

**சரவணன்:** நம்முடைய மனதின் கவனத்திற்குத் தெரியும் போது நாம் Fan Switch off செய்து விடலாம். இப்படி நமக்கு தெரியும்போது எல்லாம் Fan Switch off செய்யும் போது ஒரு நாளைக்கு 1, 2, 5, நிமிடங்கள் என மொத்தமாக 2 மணிநேரம் நமக்கு Fan off செய்வதற்கான வாய்ப்பு கிடைத்தால் கூட பரவாயில்லை தானே? தேவையற்ற எண்ண ஓட்டத்தை நமக்கு தெரியும் போது தவிர்க்கலாம் தானே? இதுவே பிறகு காலப்போக்கில் 3 மணி, 5மணி, 8மணி நேரம் என்று மாறி விடும். அதுபோல் நம்முடைய மனதின் கவனத்திற்கு எண்ண ஓட்டம் ஓடிக்கொண்டு இருப்பது தெரியும்போது எல்லாம் நாமாக திட்டமிட்டு செய்யக் கூடிய வேலைகளில் கவனம் செலுத்தினால் போதும். காலப் போக்கில் நாமாக சிந்தித்து செயல்படக் கூடிய பகுதியில் சிறப்பாக நமக்கு தெரியாமலேயே செயல்படத் தொடங்கி விடுவோம். இப்படி நமக்கு நன்கு தெரியும் போது எல்லாம் செயல்பட்டால் நல்லது தானே?

**நண்பர்:** நிச்சயமாக நல்லது தான்.

**சரவணன்:** தொடர்ந்து Fan ஓடிக்கொண்டு இருப்பதை விட நமக்கு தெரியும் போது off செய்தால் போதும். நமக்கு தெரியாமல் மனதில் எண்ண ஓட்டம் ஓடிக்கொண்டு இருப்பதைவிட நமக்கு தெரியும் போது அவற்றில் தேவையான எண்ணத்தை எடுத்து நம்முடைய தேவையான செயலுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம் இல்லையா?

**நண்பர்:** ஆமாம், எனக்கு ஒரு சந்தேகம் Fan off செய்வது என்பது எதைக் குறிக்கிறது? நீங்கள் தான் மனதை கட்டுபடுத்தவே முடியாது என்று கூறிவிட்டீர்கள், பிறகு எப்படி எண்ண ஓட்டத்தை நிறுத்த முடியும்?

**சரவணன்:** Fan Switch Off செய்வது என்பது இங்கு எதை குறிக்கிறது என்றால், நம்முடைய மனதின் கவனத்திற்கு எப்போது எல்லாம் எண்ண ஓட்டம் ஓடிக்கொண்டு இருப்பது நமது மனதிற்குத் தெரிகிறதோ அப்போது எல்லாம், அப்படி ஓடிக்கொண்டு இருக்கும் எண்ண ஓட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுக்காமல், எது நமது செயலுக்குத் தேவையோ அந்த எண்ணத்தை எடுத்து நம்முடைய செயலுக்கு பயன்படுத்திக் கொள்வதையே குறிப்பிடுகிறேன். மனதில் ஏற்படும் எண்ணத்திற்கு முக்கியத்துவம் கொடுக்காமல், அவற்றில் எதை எடுத்து செயலுக்கு பயன்படுத்திக் கொள்கிறோமோ அதை Fan Switch Off செய்வது என்று கூறுகிறோம். எண்ணத்திற்கு கொடுக்கப்படும் முக்கியத்துவத்தை குறைத்து தேவையான செயலுக்கு முக்கியத்துவத்தை கொடுப்பதையே Fan Switch Off செய்வது என்று குறிப்பிடுகிறேன்.

**நண்பர்:** Fan Off செய்வது நன்றாகப் புரிகிறது.

**சரவணன்:** காலப்போக்கில் Fan ஓடுவது பற்றி நாம் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் நாமாகத் திட்டமிட்டு செய்யக் கூடிய செயலுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் நிலைக்கு தாமாகவே வந்து விடுவோம். உங்களுக்கு தெரியும் போது Fan Off செய்தால் மட்டும் போதும்.

**நண்பர்:** Fan தத்துவம் ரொம்ப நல்ல விளக்கமாக உள்ளது.

**சரவணன்:** உங்களுக்கு எப்போது Fan ஓடிக் கொண்டு இருப்பது தெரிகிறதோ அப்போது நிறுத்தினால் போதும். அதற்கு முன்பு ஏன் இவ்வளவு நேரம் Fan ஓடியது என்னுடைய கவனத்திற்கு தெரியாமலேயே போய் விட்டது என்று வருத்தப்படத் தேவையில்லை. ஏனெனில் அதுவரை நமக்கு Fan ஓடியதே நம்முடைய கவனத்திற்குத் தெரியவில்லை. இவ்வளவு நேரம் Fan ஓடிக்கொண்டே இருந்ததே என்று எல்லாம் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. நமக்குத் தெரியாமல் Fan ஓடியதற்கு நாம் எப்படி பொறுப்பை ஏற்றுக் கொள்வது?

**நண்பர்:** அது சரிதான் நமக்கு ஞாபகம் வருகையில் நாம் Switch Off செய்தால் போதும் அப்படித் தானே?

**சரவணன்:** ஆமாம், நமக்கு ஞாபகம் வருகையில் Fan Off செய்வது ஒன்று மட்டும் தான் நம்மால் முடியும். நமக்கு ஞாபகம் வராததற்கு நாம் எப்படி பொறுப்பு ஏற்றுக் கொள்ளமுடியும், நமக்கு Fan ஓடுவது தெரிந்தால் மட்டுமே நம்மால் நிறுத்த முடியும்.

**நண்பர்:** ஆமாம், சரிதான் எனது கவனத்திற்குத் தெரிந்தால் தான் என்னால் நிறுத்த முடியும். இது மட்டும் போதுமா? இல்லை இன்னும் ஏதாவது படிக்க வேண்டுமா?

**சரவணன்:** இப்போது நான் கூறியது உங்களுக்குப் புரிகிறதா?

**நண்பர்:** நன்றாகப் புரிகிறது.

**சரவணன்:** அப்படி என்றால் இது ஒன்று மட்டுமே போதும். மனதில் நன்றாக புரிந்து கொள்ளுங்கள், உங்கள் வசதிக்காக நீங்கள் அதிகம் பயன்படுத்தும் இடங்களில் Fan Off என்று கூட எழுதி வைத்துக் கொள்ளுங்கள். இது கூட கொஞ்ச நாட்களுக்கு உங்களுக்கு நினைவுபடுத்திக் கொள்வதற்காக (Just Reminder). கொஞ்ச நாட்களில் வித்தியாசம் உங்களுக்கே தெரியும்.

**நண்பர்:** நினைவுபடுத்திக் கொள்வதற்காக, அப்படித் தானே? நிச்சயம், வித்தியாசம் தெரியும் என்று நினைக்கிறேன். இதை நான் Follow பண்ணிப் பார்க்கிறேன்.

**சரவணன்:** நான் கூறியது உங்களுக்கு நிறைவைத் தருவதாக இருக்கிறதா?

**நண்பர்:** இந்த Fan உதாரணம் நன்றாகப் புரிகிறது. இதுவரை நானும் எத்தனையோ ஆன்மிக புத்தகம் படித்திருக்கிறேன். விழிப்புணர்வு ஒன்று தான் தீர்வு என்று கூறப்பட்டுள்ளது. கவனமாக இருத்தல், சாட்சியாக இருத்தல் என்று எல்லாம் கூறப்பட்டு இருக்கிறது. ஆனால் விழிப்புணர்வை ஏற்படுத்துவது, கவனமாக இருப்பது, சாட்சியாகப் பார்ப்பது என்பதற்கு நாம் என்ன செய்வது என்பதற்கு சரியான விளக்கம் புரியாமல் இருந்தது. ஆனால் இப்போது விழிப்புணர்வு, கவனம், சாட்சி எப்படி ஏற்படுகிறது என்பது நன்றாகப் புரிகிறது.

**சரவணன்:** விழிப்புணர்வை நாம் எப்படி உருவாக்க முடியும்? நமது மனதின் கவனத்திற்கு தெரியும் போது தான் விழிப்புணர்வே ஏற்பட முடியும். விழிப்புணர்வு ஏற்பட்ட பிறகு தான் நாம் சரியாக செயல்பட முடியும்.

**நண்பர்:** சரிதான், சாட்சியானதை கொண்டு வருவதற்கு என்று எல்லாம் மிகவும் கஷ்டப்பட்டு இருக்கிறேன்.

**சரவணன்:** நீங்கள் நிறைய ஆன்மிக புத்தகங்கள் படித்து விட்டீர்கள், போதும். நமது நடைமுறை வாழ்க்கைக்கு எந்த அளவிற்கு அவைகள் உதவுகிறது என்பதை நாம் பார்க்க வேண்டும். அதற்காக மற்ற ஞானிகள் கூறியது தவறு என்று கூறவில்லை. கொஞ்ச நாட்களுக்கு எதுவும் படிக்க வேண்டாம். நான் கூறியது உங்களுக்குப் புரிகிறது இல்லையா?

**நண்பர்:** மிக நன்றாகப் புரிகிறது Fan தத்துவம்.

**சரவணன்:** இந்த Fan உதாரணத்தை உங்கள் மனதில் ஒரு படம் போல் கற்பனை செய்து பாருங்கள். அதாவது Fan ஓடிக்கொண்டே இருக்கிறது, அப்படி ஓடிக்கொண்டே இருப்பது நமது கவனத்திற்குத் தெரிகிறது. நமது கவனத்திற்குத் தெரிந்த பிறகு நாம் Fan off செய்துவிட்டு நமது செயல்களின் பக்கம் திரும்புகிறோம். இப்படி நினைத்து பாருங்கள்.

**நண்பர்:** ஞாபகத்திற்காக உருவாக்கிப் பார்க்கலாம்.

**சரவணன்:** இது ஒரு பயிற்சி இல்லை, உங்களுக்கு இந்த புதிய கருத்து ஞாபகப்படுத்துவதற்காக, பிறகு கொஞ்ச நாட்களில் Software Adopt ஆவது போல், தானாகவே Adopt ஆகிவிடும். காலப்போக்கில் அதுவே நம்மை மாற்றிவிடும்.

**நண்பர்:** ஆமாம்.

**சரவணன்:** இதில் வெற்றி என்பது இதை நீங்கள் நன்றாகப் புரிந்து கொண்டு, அதன் மூலம் உங்கள் நடைமுறை வாழ்க்கையில் மாற்றம் கிடைத்தால், அது தான் வெற்றி. வாழ்த்துக்கள்.

"நமக்குத் தெரியும் போது Fan Switch Off செய்தால் போதும்."

-V.A.P. சரவணன்
செல்: 9994205880



பெங்களூரு அன்பர்களுடன்
ஸ்ரீ பகவத் ஐயா

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

நமது பகவத் பாதையின் நோக்கமே அனைவரும் ஞானத் தெளிவை பெற வேண்டும் என்பதே, எது நமக்கு ஆன்ம விடுதலையை தரவல்லதோ அதுவே ஞானம் என்று சாஸ்திரங்களும் வேதங்களும் கூறுகின்றன. விடுதலை ஒன்றே நமது எல்லாப் பிரச்சினைகளுக்கும் தீர்வாகவும் நமது வாழ்வை ஒரு முழுமையான வாழ்வாகவும் மாற்ற வல்லதாகும்.

விடுதலை பெற்றவர்களே இன்பம் துன்பம் என்று எதிலும் தேங்கி நில்லாமல் கணத்துக்கு கணம் பிரவாகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்த பேறு நமது பகவத் பாதையின் மூலம் பலரும் பெற்று வாழந்து வந்து கொண்டு இருக்கிறார்கள்.

இருப்பினும் நாம் இன்னும் பல ஆயிரக்கணக்கானோரை பகவத் பாதையின் மூலம் சந்தித்து இந்த ஞானத் தெளிவை கொடுக்க வேண்டியுள்ளது.

ஞானம் என்ற உண்மை எவ்வளவு எளிமையான ஒன்றாக இருந்தாலும், அதைப் பற்றிய கற்பிதங்களும், கற்பனைகளுமே அதை அடைவதற்கு மிகப் பெரிய தடையாக இருக்கின்றன. இந்த தடைகளை தகர்த் தெறிவதற்கான சரியான வழி நமது பகவத் பாதையை தொடர்ந்து படிப்பதும், ஞான முகாமில் பங்கேற்பதுமாகும்.

அந்த வகையில் வருகின்ற ஏப்ரல் 30, மே 1, 2 மற்றும் 3 ஆகிய தேதிகளில் நடைபெற இருக்கின்ற ஏற்காடு ஞான முகாம் அனைவருக்கும் பயனுள்ளதாக அமையும். பொதுவாக ஞானம் பெறும் வரை அனைவருக்கும் குரு தேவை. ஞானத் தெளிவை அடைந்த பிறகு, குரு நண்பராகி விடுகிறார்.

நாம் நமக்கே ஒளியாகி விடுகிறோம். நம்மை வழி நடத்த வேறு ஒருவர் தேவையில்லை. நம்மை நாமே வழி நடத்தும் வல்லமை பெற்றதோடு மற்றவருக்கும் ஒளி கொடுக்கும் தன்மை வந்து விடும்.

குருவுக்கு நாம் நன்றியுள்ள விசுவாசமான நண்பராகி விடுகிறோம். இந்நிலை அடைவதற்கு இந்த ஞானப் புரிதலை துளியும் சந்தேகமின்றி தெள்ளத் தெளிவாக புரிந்து கொள்ள வேண்டும். புரிந்து கொள்வது மட்டுமே நமது வேலை, இதற்கு மிகவும் உறுதுணையாக இருப்பது பகவத் பாதையை படிப்பதோடு ஞான முகாமில் கலந்து கொண்டு தெளிவு பெறுவதே ஆகும். அதற்கு ஏற்ற வகையில் நடைபெற இருக்கின்ற ஏற்காடு ஞான முகாமில் பகவத் ஐயாவின் சிறப்புரையோடு அன்பர்களின் ஆழமான சந்தேகங்களை தீர்க்கும் வண்ணம் **"கேள்வி – பதில்"** பகுதிக்கு அதிக நேரம் கொடுக்க வேண்டும் என்பதற்காகவே 4 நாட்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இந்த ஞானமுகாமில் கலந்து கொள்பவர்கள் அனைவரும் ஞானிகளாக திரும்ப வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். அனைவரும் கலந்து கொண்டு ஞானத்தெளிவு பெற அழைக்கிறோம்.

மேலும் நமது பகவத் பாதையில் பயணிக்கும் அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்...

நமது பகவத் ஐயா அவர்கள் பெங்களூரில் தங்கியிருக்கப் போகிறார். அவருடன் தங்கியிருந்து சமையல் செய்து கொடுத்து உதவ ஓர் ஆண் உதவியாளர் தேவைப்படுகிறார். தகுந்த சம்பளம் கொடுக்கப்படும். தங்களுக்கு அறிமுகமான சமையல் தெரிந்த நல்ல நபர்கள் இருந்தால் எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

தொடர்புக்கு : 9994205880, 9789165555

ஆசிரியர். K.S. ஜீவமணி
**செல் :** 97891-65555

ஸ்ரீ பகவத் ஐயாவின் பெங்களுரு முகவரி:

# Sri Bagavath
# Sri Bagavath Mission

862, 26th Main, B.T.M. 2nd Stage, First Phase, **BENGALURU - 560 076.**

**Cell: Dr. N. Kailasam : 0 99867 26000, Sri Bagavath Ayya : 0 99442 15677**

ஐயாவை பெங்களூரில் சந்திக்க விரும்புபவர்கள் மேற்கண்ட தொலைபேசியில் தொடர்பு கொண்டு அனுமதி பெற்று சந்திக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். இங்கு ஐயாவின் அனைத்து நூல்களும் கிடைக்கும்.

# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஏற்காடு சிறப்பு ஞானமுகாம்

சேலத்தில் ஐயாவின் ஞானமுகாம் சென்ற ஆண்டைப் போலவே மே மாதம் கோடை வெப்பத்தின் தாக்கத்தை தவிர்க்க இயற்கைச் சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் அமைந்துள்ள **House of Peace** - என்ற அமைதி இல்லத்தில் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.

இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.

1. ஞானம் புரிதல்,
2. அகம் – புறம்
3. நான் யார்?
4. தெளிவில் உறுதி
5. ஞானத் தெளிவுக்குப் பின் நமது செயல்பாடு
6. சமுதாயம் மற்றும் குடும்ப உறவில் ஞானியின் பங்கு
7. பொருளாதாரத்தில் ஞானியின் பங்கு

மேற்குறிப்பிட்ட தலைப்புகளில் ஐயா உரையாற்றுவதோடு அன்பர்களின் எல்லாவிதமான கேள்விகளுக்கும் விடையளிக்க உள்ளார்.

ஐயாவை தனிப்பட்ட முறையில் சந்தித்து அன்பர்கள் தங்களுடைய தனிப்பட்ட சந்தேகங்களை களைந்து தெளிவு பெறும் வாய்ப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

நாள் : **30.04.2015 வியாழன் மாலை 4 மணி முதல்**
**03.05.2015 ஞாயிறு மாலை 3 மணி வரை**

இடம்: **House of Peace ( Glass House) அமைதி இல்லம்,** ஏற்காடு, சேலம்.

ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.

உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 2500/– மட்டும்.

90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் விரைவில் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம். தங்கள் பெயர், முகவரி, தொலைபேசி, இ–மெயில் ஆகிய தகவல்கள் எழுதி அனுப்பவும்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

**1) M.O 2) D.D. 3) Direct payment 4) Online Payment**

1. ஸ்ரீ பகவத் மிஷன், 31 ராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 636003.
2. வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.
3. நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.
4. Credit Card or Debit Card மூலம் www.pravaagam.org என்ற இணைய தளத்தில் முன்பதிவு செய்யலாம்.

மேலும் விபரங்களுக்கு : 9994205880, 9789165555, 9443290559

அனைவரும் வருக! தெளிவு பெறுக!

இப்படிக்கு
**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 3.



## மனத் தெளிவு

ஜென் கதை

ஒருமுறை புத்தர் தன்னுடைய சீடர்களுடன் பயணப் பட்டுக் கொண்டிருந்தார்.

அவரது சீடர்களில் ஒருவன் சில பிரச்சினைகளுடன் மனக் குழப்பத்திலேயே இருந்தான். அதை கண்டு கொண்ட புத்தர் "உனக்கு என்ன பிரச்சினை? ஏன் குழப்பமாக இருக்கிறாய்?" என்று கேட்டார்.

சீடன் தன் மன சஞ்சலத்தை கூறி, "நான் எவ்வளவு முயன்றும் மனம் அமைதி அடைய முடியவில்லை, மனதில் போராட்டம் இருந்து கொண்டே இருக்கிறது. மன அமைதிக்கான வழி கூறுங்கள் சுவாமி" என்றான்.

புத்தர் எந்த பதிலும் கூறாமல் மௌனமாக தன் பயணத்தை மேற்கொண்டார்.

அவர்களது பயணத்தில்.......

ஒரு ஏரியை எதிர் கொண்டபோது, அங்கிருந்த பெரிய ஆலமர நிழலில் அனைவரும் சற்று ஓய்வெடுக்கும் எண்ணத்துடன் தங்கினார்கள். புத்தர் அந்த மனக் குழப்பத்தில் இருந்த சீடனை அனுப்பி ஏரியில் இருந்து குடிப்பதற்கு நீர் கொண்டு வரச் சொன்னார்.

அந்த சீடனும் இருந்த பானை ஒன்றை எடுத்துக் கொண்டு நீர் நிலையை நோக்கி நடந்தான்.

அந்த நேரத்தில், மாட்டு வண்டிக்காரர் ஒருவர், ஏரிக்குள் இறங்கி ஏரியை கடந்து சென்றார். ஏரி கலங்கி விட்டது. அத்துடன் ஏரியின் கீழ்ப் பகுதியில் இருந்த சேறும் சகதியும் மேலே வந்து நீரை அசுத்தப் படுத்தி, பார்ப்பதற்கே உபயோகமற்றதாகக் காட்சியளித்தது.

இந்த கலங்கிய நீர் எப்படிக் குடிப்பதற்கு பயன்படும்? இதை எப்படிக் குருவிற்கு கொண்டு போய்க் கொடுப்பது என்று தண்ணீரில்லாமல் திரும்பிவிட்டான்.

அத்துடன் தன் குருவிடம் அதை தெரிவித்தான்.

ஒரு மணி நேரம் சென்ற பிறகு, புத்தர் சீடனை மீண்டும் ஏரிக்குச் சென்றுவரப் பணித்தார்.

நீர்நிலையருகே சென்று சீடன் பார்த்தான். இப்போது நீர் தெளிந்திருந்தது. சகதி, நீரின் அடியிற்சென்று படிந்திருந்தது. ஒரு பானையில் தண்ணீரை முகண்டு கொண்டு சீடன் புத்தரிடம் திரும்பினான்.

புத்தர் தண்ணீரைப் பார்த்தார். சீடனையும் பார்த்தார். பிறகு மெல்லிய குரலில் கேட்டார்.

"தண்ணீர் சுத்தமாவதற்கு என்ன செய்தாய்?"

"நான் ஒன்றும் செய்யவில்லை சுவாமி ! அதை அப்படியே விட்டு விட்டு வந்தேன். அது தானாகவே சுத்தமாயிற்று !"

"நீ அதை அதன் போக்கிலேயே விட்டாய். அது தானாகவே சுத்தமாயிற்று. அத்துடன் உனக்கு தெளிந்த நீரும் கிடைத்தது இல்லையா?"

"ஆமாம் சுவாமி !"

"நம் மனமும் அப்படிப்பட்டதுதான். மனம் குழப்பத்தில் இருக்கும் போது நாம் ஒன்றும் செய்ய வேண்டாம். அதை அப்படியே விட்டு விட வேண்டும். சிறிது கால அவகாசம் கொடுக்க வேண்டும். அது தனக்குத்தானே சரியாகிவிடும். நாம் எந்தவித முயற்சியும் செய்ய வேண்டாம். மனதை சமாதானப் படுத்தும் விதத்தைப் பற்றி சிந்திக்கவும் வேண்டாம். அது அமைதியாகிவிடும். அது தன்னிச்சையாக நடக்கும். அத்துடன் நம்முடைய முயற்சியின்றி அது நடக்கும். மன அமைதி என்பது தாமாக ஏற்படுவது. அதற்கு நம் பங்கு எதுவும் தேவை இல்லை. இதைப் புரிந்து கொள்வதே ஞானம்." என்றார்.

சீடன் புரிந்து கொண்டு தெளிவு பெற்றான்.

ஜென் கதை - "மனத் தெளிவு"



**Registration Number of the News Paper TNTAM/2014/57698**

*If undelivered please return to:*



Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணி வரை ஐயாவின் கருத்துகளில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு
ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053.
செல்: 9884097438, 9381019479, 9444756744
ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555